கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு - 15

உ

சிவமயம்

# திருக்குறிப்புத்தொண்டநாயனர் புராணம்

## உரையுடனும் படங்களுடனும்

காஞ்சிபுரத் தலத்தைப்பற்றிய

சைவத் தேய்வப் பன்னிரு திருமுறைத்திரட்டு அடங்கியது

பதிப்பாசிரியர்

கோவை - வழக்கறிஞர்

திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B. A.

சாது அச்சுக்கூடம்,

இராயப்பேட்டை, சென்னை

கோவைத் தமிழ்ச் சங்கம்

கோயமுத்தூர்

15-9-1940



விலை ரூ. 1—0—0

கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு - 15

உ

சிவமயம்

# திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்

## (உரையுடனும் படங்களுடனும்)

காஞ்சிபுரத் தலத்தைப்பற்றிய

சைவத் தெய்வப் பன்னிரு திருமுறைத்திரட்டு அடங்கியது

பதிப்பாசிரியர்

கோவை - வழக்கறிஞர்

திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B. A.

சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை.

கோவைத் தமிழ்ச் சங்கம்

கோயமுத்தூர்

15-9-1940



விலை ரூ. 1—0—0

# முகவுரை

—௵—

திருத்தொண்டர் புராண உரை வெளியீட்டை முற்றும் வாங்கிப் படிக்க இயலாத அன்பர்களுக்கும் தமிழ் மாணவர்களுக்கும் பயன்படும்பொருட்டுத் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம் உரையுடனும் காஞ்சித்தலத்தைப்பற்றிய சைவத் தெய்வப் பன்னிரு திருமுறைத் திரட்டுக்களுடனும் தனிப்புத்தகமாக வெளியிடப்பெறுகின்றது. இன்னும் சில புராணங்களையும் இதுபோலவே தனித்தனி இலகுவான விலையில் வெளியிடக் கோவைத் தமிழ்ச் சங்கத்தார் எண்ணியுள்ளார்கள். தமிழ் அன்பர்களும் சைவ அன்பர்களும் இவற்றைப் போதியபடி ஆதரிப்பார்களாக.

சேக்கிழார் நிலயம்
கோவை - 20-9-40

C. K. சுப்பிரமணிய முதலியார்,
பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்



## படங்களின் விவரம்

காஞ்சீபுரத் திருத்தலங்களின்

# சைவத் தெய்வத் திருமுறைத்திரட்டு

## ஆளுடைய பிள்ளையார்

திருமுறை - 1 பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி நூலொருபாற் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சிதன்னு
ளந்தமில் குணத்தா ரவர்போற்ற வணங்கினோ டாடல்புரி
யெந்தைமேவிய வேகம்பந் தொழுதேத்த விடர்கெடுமே. க

சாகம்பொன் வரையாகத் தானவர் மும்மதில் சாயவெய்து
ஆகம்பெண் ணொருபாக மாகவர வொடுநூ லணிந்து
மாகந்தோய் மணிமாட மாநகர்க் கச்சிமா நகரு
ளேகம்பத்துறை யீசன் சேவடி யேத்த விடர்கெடுமே. ௬

பிரமனுந் திருமாலுங் கைதொழப் பேரழலாய பெம்மான்
அரவஞ் சேர்சடை யந்தண னணங்கினொ டமருமிடம்
கரவில் வண்கையி னார்கள்வாழ் கலிக்கச்சி மாநகருள்
மரவஞ் சூழ்பொழி லேகம்பந் தொழவல் வினைபோமே. ௯

ஏரி னார்பொழில் சூழ்ந்த கச்சியேகம்ப மேயவனைக்
காரினார் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
சீரினார் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. கக

திருச்சிற்றம்பலம்

---

திருமுறை - 2 பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொ டாணாகிய பெம்மானை
யிறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே. க

நொச்சியே வன்னி கொன்றை மதிகூவிள
முச்சியே புனைதல் வேடம்விடை யூர்தியான்
கச்சி யேகம்ப மேய கறைக்கண்டனை
நச்சியே தொழுமினும் மேல்வினை நையுமே. உ

பாராரு முழுவமொந்தை குழலி யாழொலி
சீராலே பாட லாடல்சிதை வில்லதோ
ரேரார்பூங் கச்சி யேகம்பனை யெம்மானைச்
சேராதா ரின்பமா யந்நெறி சேராரே. ௩

சடையானைத் தலைகையேந் திப்பலி தருவார்தங்
கடையேபோய் மூன்றுங்கொண் டான்கலிக் கச்சியுட்
புடையே பொன்மலருங் கம்பைக்கரை யேகம்ப
முடையானை யல்லதுள் காதென துள்ளமே. ௫

மழுவாளோ டெழில்கொள் சூலப்படை வல்லார்தங்
கெழுவாளோ ரிமையாருச்சி யுமையாள் கங்கை
வழுவாமே மல்குசீ ரால்வள ரேகம்பந்
தொழுவாரே விழுமியார் மேல்வினை துன்னுவே. ௬

விண்ணுளார் மறைகள் வேதம்விரித் தோதுவார்
கண்ணுளார் கழலின் வெல்வார் கரிகாலனை
நண்ணுவா ரெழில்கொள் கச்சிநக ரேகம்பத்
தண்ணலா ராடு கின்றவலங் காரமே. ௭

அந்தண் பூங்கச்சி யேகம்பனை யம்மானைக்
கந்தண் பூங்காழி யூரன்கலிக் கோவையாற்
சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்
பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

திருமுறை - 3 பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கருவார் கச்சித், திருவே கம்பத், தொருவா வென்ன, மருவா வினையே. ௧
மதியார் கச்சி, நதியே கம்பம், விதியா லேத்தப், பதியா வாரே. ௨
கலியார் கச்சி, மலியே கம்பம், பலியார் போற்ற, நலியா வினையே. ௩
வரமார் கச்சிப், புரமே கம்பம், பரவா வேத்த, விரவா வினையே. ௪
படமார் கச்சி, யிடமே கம்பத், துடையா யென்ன, வடையா வினையே. ௫
நலமார் கச்சி, நிலையே கம்பங், குலவா வேத்தக், கலவா வினையே. ௬
கரியி னுரியன், திருவே கம்பன், பெரிய புரமூன், றெரிசெய் தானே. ௭
இலங்கை யரசைத், துலங்க வூன்று, நலங்கொள் கம்ப, னிலங்கு சரணே. ௮
மறையோ னரியு, மறியா வனலன், னெறியே கம்பங், குறியாற் றொழுமே. ௯
பறியாத் தேரர், நெறியில் கச்சிச், செறிகொள் கம்பங், குறுகு வோமே. ௧0
கொச்சை வேந்தன், கச்சிக் கம்ப, மெச்சுஞ் சொல்லை, நச்சும் புகழே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

திருமுறை - 3 பண் - பழம்பஞ்சுரம் - திருஇயமகம்

திருச்சிற்றம்பலம்

பாயு மால்விடை மேலொருபாகனே பாவை தன்னுரு மேலொரு பாகனே
தூய வானவர் வேதத் துவனியே சோதிமா லெரி வேதத் துவனியே
யாயுநண்பொரு ளுண்பொரு ளாதியே யால நீழ லரும்பொரு ளாதியே
காயு வின்மதன் பட்டது கம்பமே கண்ணு தற்பர மற்கிடங் கம்பமே. ௧

வெள்ளை ருக்கொடு தும்பை மிலைச்சியே வேறு முன்செலத் தும்பை மிலைச்சியே
யள்ளு நீறது பூசுவ தாகமே யான மாசுண மூசுவ தாகமே
புள்ளி யாடை யுடுப்பது கத்துமே போன வூழி யுடுப்பது கத்துமே
கள்ளு லாமலர்க் கம்ப மிருப்பதே காஞ்சி மாநகர்க் கம்ப மிருப்பதே. ௩

முதிர மங்கை தவஞ்செய்த காலமே முன்பு மங்கை தவஞ்செய்த காலமே
வெதிர்க ளோடகில் சந்த முருட்டியே வேழ மோடகில் சந்த முருட்டியே
யதிர வாறு வரத்தொழு வத்தோடே யானை யாடு வரத்தெழு வத்தோடே
கதிர்கொள் பூண்முலைக் கம்ப மிருப்பதே காஞ்சி மாநகர்க் கம்ப மிருப்பதே. எ

கந்த மார்பொழில் சூழ்தரு கம்பமே காதல்செய்திடு தீர்த்தமுங் கம்பமே
புந்தி செய்து விரும்பிப் புகலியே பூசு ரன்றன் விரும்பிப் புகலியே
அந்த மில்பொரு ளாயின கொண்டுமே யண்ண லின்பொரு ளாயின கொண்டுமே
பந்த னின்னியல் பாடிய பத்துமே பாட வல்லவ ராயின பத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## ஆளுடைய அரசுகள்

திருமுறை - 4 பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
யரவாடச் சடைதாழ வங்கையி லனலேந்தி
யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. ௧

தேனோக்குங் கிளிமழலை யுமைகேள்வன் செழும்பவளந்
தானோக்குந் திருமேனி தழலுருவாஞ் சங்கரனை
வானோக்கும் வளர்மதிசேர் சடையானை வானோர்க்கு
மேனோர்க்கும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. ௨

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
யப்போது மலர்தூவி யைம்புலனு மகத்தடக்கி
யெப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே. ௩

தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலாற்
பூசனைப் பூசனைக ளுகப்பானைப் பூவின்கண்
வாசனை மலைநிலநீர் தீவளியா காசமாம்
ஈசனை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. ௪

விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்
புரித்தானைப் பதஞ்சந்திப் பொருளுருவாம் புண்ணியனைத்
தரித்தானைக் கங்கைநீர் தாழ்சடைமேல் மதின்மூன்று
மெரித்தானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. ௫

ஆகம்பத் தரவணையா னயனறிதற் கரியானைப்
பாகம்பெ ணுண்பாக மாய்நின்ற பசுபதியை
மாகம்ப மறையோது மிறையானை மதிற்கச்சி
யேகம்ப மேயானை யென்மனத்தே வைத்தேனே. ௬

அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதங்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சினமல்கு கயிலாய
மெடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே. ௧0

திருச்சிற்றம்பலம்

---

திருமுறை - 4 திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நம்பனை நகர மூன்று மெரியுண வெருவ நோக்கு
மம்பனை யமுதை யாற்றை யணிபொழிற் கச்சி யுள்ளே
கம்பனைக் கதிர்வெண் டிங்கட் செஞ்சடைக் கடவு டன்னைச்
செம்பொனைப் பவளத் தூணைச் சிந்தியா வெழுகின் றேனே. ௧

ஒருமுழ முள்ள குட்ட மொன்பது துளையு டைத்தா
யரைமுழ மதன கல மதனில்வாழ் முதலை யைந்து
பெருமுழை வாய்தல் பற்றிக் கிடந்துநான் பிதற்று கின்றேன்
கருமுகில் தவழு மாடக் கச்சியே கம்ப னீரே. ௨

மலையினார் மகளோர் பாக மைந்தனார் மழுவொன் றேந்திச்
சிலையினால் மதில்கண் மூன்றுந் தீயெழச் செற்ற செல்வர்
இலையினார் சூல மேந்தி யேகம்ப மேவி னாரைத்
தலையினால் வணங்க வல்லார் தலைவர்க்குந் தலைவர் தாமே. ௩

கொண்டதோர் கோல மாகிக் கோலக்கா வுடைய கூத்தன்
உண்டதோர் நஞ்ச மாகி லுலகெலா முய்ய வுண்டான்
எண்டிசை யோரு மேத்த நின்றவே கம்பன் றன்னைக்
கண்டுநா னடிமை செய்வான் கருதியே திரிகின் றேனே. ௭

படமுடை யரவி னோடு பனிமதி யதனைச் சூடிக்
கடமுடை யுரிவை மூடிக் கண்டவ ரஞ்ச வம்ம !
இடமுடைக் கச்சி தன்னு ளேகம்ப மேவி னான்றன்
நடமுடை யாடல் காண ஞாலந்தா னுய்ந்த வாறே. ௮

பொன்திகழ் கொன்றை மாலை பொருந்திய நெடுந்தண் மார்பர்
நன்றியிற் புகுந்தெ னுள்ள மெள்ளவே நவில நின்று
குன்றியி லடுத்த மேனிக் குவளையங் கண்ட ரெம்மை
இன்றுயிற் போது கண்டா ரினியரே கம்ப னாரே. ௯

அருத்தியார் பழனத் துள்ளார் தொண்டர்கள் பலரு மேத்த
அருத்தியா லன்பு செய்வா ரவரவர்க் கருள்கள் செய்தே
யெருத்தினை யிசைய வேறி யேகம்ப மேவி னார்க்கு
வருத்திநின் றடிமை செய்வார் வல்வினை மாயு மன்றே. ௧0

திருச்சிற்றம்பலம்

## திருமுறை - 4

திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

ஓதுவித் தாய்முன் னறவுரை காட்டி யமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே. க

மெய்யம்பு கோத்த விசயனோ டன்றொரு வேடுவனாய்ப்
பொய்யம்பெய் தாவ மருளிச்செய் தாய்புர மூன்றெரியக்
கையம்பெய் தாய்நுன் கழலடி போற்றாக் கயவர்நெஞ்சிற்
குய்யம்பெய் தாய்கொடி மாமதில் சூழ்கச்சி யேகம்பனே. ௨

கருவுற்ற நாண்முத லாகவுன் பாதமே காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமு நானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா ! திருவால வாயா ! திருவாரூரா !
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே! ௩

அரியய னிந்திரன் சந்திரா தித்த ரமர ரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யாருணங் காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர் புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப வென்னோ திருக்குறிப்பே ? ௭

பாம்பரைச் சேர்த்திப் படருஞ் சடைமுடிப் பால்வண்ணனே
கூம்பலைச் செய்த கரதலத் தன்பர்கள் கூடிப்பன்னாள்
சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் றாள்சரணென்
றேம்பலிப் பார்கட் கிரங்குகண் டாய்கச்சி யேகம்பனே! ௮

உந்திநின் றாருன்ற னோலக்கச் சூளைகள் வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான்
வந்துநின் றாரய னுந்திரு மாலு மதிட்கச்சியா !
யெந்தநின் றேமினி யெங்ஙன மோவந் திறைஞ்சுவதே ? ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருமுறை - 5

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகா ணெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை யேகம்பன்
றொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே. க

நச்சி நாளு நயந்தடி யார்தொழ
விச்சை யாலுமை நங்கை வழிபடக்
கொச்சை யார்குறு கார்செறி தீம்பொழிற்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. ௨

மருந்தி னோடுநற் சுற்றமும் மக்களும்
பொருந்தி நின்றெனக் காயவெம் புண்ணியன்

கருந்த டங்கண்ணி னாளுமை கைதொழ
இருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே. ரு

பொருளி னோடுநற் சுற்றமும் பற்றிலர்க்
கருளு நன்மைதந் தாய வரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்
இருள்கெ டச்சென்று கைதொழு தேத்துமே. சு

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்
நோக்கு வானமை நோய்வினை வாராமே
காக்கு நாயகன் கச்சியே கம்பனே. எ

பண்ணி லோசை பழத்தினி லின்சுவை
பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே. அ

திருவி னாயகன் செம்மலர் மேலயன்
வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்
ஒருவ னாயுணர் வாயுணர் வல்லதோர்
கருவு ளாயகன் கச்சியே கம்பனே கூ

இலங்கை வேந்த னிராவணன் சென்றுதன்
விலங்க லையெடுக் கவிர லூன்றலுங்
கலங்கிக் கச்சியே கம்பவோ வென்றலும்
நலங்கொள் செல்வளித் தானெங்க ளாதனே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூமே லானும் பூமகள் கேள்வனும்
நாம தேவ ரெனுமை நடுக்குறத்
தீமே வும்முரு வாதிரு வேகம்பா
ஆமோ வல்லற் படவடி யோங்களே ? க

அருந்தி றலம ரரயன் மாலொடு
திருந்த நின்று வழிபடத் தேவியோ
டிருந்த வன்னெழி லார்கச்சி யேகம்பம்
பொருந்தச் சென்று புடைபட் டெழுதுமே. உ

பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்பு றுமமு தாயவ னேகம்பங்
குறிப்பி னிற்சென்று கூடித் தொழுதுமே. ௩

சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ
டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்

புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்தவெம்
எந்தை யேகம்ப மேத்தித் தொழுமினே. ரு

சாக்கி யத்தொடு மற்றுஞ் சமண்படும்
பாக்கியம் மிலர்பாடுசெ லாதுறப்
பூக்கொள் சேவடி யான்கச்சி யேகம்பம்
நாக்கொ டேத்தி நயந்து தொழுதுமே. சா

மூப்பி னோடு முனிவுறுத் தெந்தமை
யாப்ப தன்முன் னணியம ரர்க்கிறை
காப்ப தாய கடிபொழி லேகம்பம்
சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே. எ

பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுள்
மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய
கைய னைக்கச்சி யேகம்ப மேவிய
வைய னைத்தொழு வார்க்கில்லை யல்லலே. அ

அரக்கன் றன்வலி யுன்னிக் கயிலையை
நெருக்கிச் சென்றெடுத் தான்முடி தோணெறித்
திரக்க வின்னிசை கேட்டவ னேகம்பந்
தருக்க தாகநாஞ் சார்ந்து தொழுதுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## திருமுறை - 6 திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண்
குவலயன்காண் குவலயத்தி னீரா னான்காண்
காற்றவன்காண் கனலவன்காண் கலிக்கு மின்காண்
கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை
நீற்றவன்கா ணிலாவூருஞ் சென்னி யான்காண்
நிரையார்ந்த புனற்கங்கை நிமிர்ச டைமே
லேற்றவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. க

பரந்தவன்காண் பல்லுயிர்க ளாகி யெங்கும்
பணிந்தெழுவார் பாவமும் வினையும் போகத்
துரந்தவன்காண் தூமலரங் கண்ணி யான்காண்
டோற்ற நிலையிறுதிப் பொருளாய் வந்த
மருந்தவன்காண் வையங்கள் பொறைதீர்ப் பான்காண்
மலர்தூவி நினைந்தெழுவா ருள்ள நீங்கா
திருந்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன்கா ணவனென் னெண்ணத் தானே. உ

நீற்றவன்கா ணீராகித் தீயா னான்கா
ணிறைமழுவுந் தமருகமு மெரியுங் கையிற்
றேற்றவன்காண் டோற்றக்கே டில்லா தான்காண்
றுணையிலிகாண் டுணையென்று தொழுவா ருள்ளத்

போற்றவன்காண் புகழ்கடலைப் படைத்தான் முன்காண்
பொறியரவும் விரிசடைமேற் புனலுங் கங்கை
யேற்றவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. ௯

தாயவன்கா ணுலகுக்குத் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண் மலைமங்கை பங்கா வென்பார்
வாயவன்காண் வரும்பிறவி நோய்தீர்ப் பான்காண்
வானவர்க்குந் தானவர்க்கு மண்ணு ளோர்க்குஞ்
சேயவன்கா ணினைவார்க்குச் சித்த மாரத்
திருவடியே யுள்கிநினைந் தெழுவா ருள்ள
மேயவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. ௭

முடித்தவன்காண் வன்கூற்றைச் சீற்றத் தீயால்
வலியார்தம் புரமூன்றும் வேவச் சாபம்
பிடித்தவன்காண் பிஞ்ஞகனும் வேடத் தான்காண்
பிணையல்வெறி கமழ்கொன்றை யரவு சென்னி
முடித்தவன்காண் மூவிலைநல் வேலி னுன்காண்
முழங்கியுரு மெனத்தோன்று மழையாய் மின்னி
இடித்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. ௮

வருந்தான்காண் மனமுருகி நினையா தார்க்கு
வஞ்சகன்கா ணஞ்செழுத்து நினைவார்க் கென்று
மருந்தவன்காண் வான்பிணிகள் டீரும் வண்ணம்
வானகமு மண்ணகமு மற்று மாகிப்
பரந்தவன்காண் படர்சடையெட் டுடையான் முன்காண்
பங்கயத்தோன் றன்சிரத்தை யேந்தி யூரு
ரிரந்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. ௯

அறுத்தான்கா ணயன்சிரத்தை யமரர் வேண்ட
வாழ்கடலி னஞ்சுண்டங் கணிநீர்க் கங்கை
செறுத்தான்காண் டேவர்க்குந் தேவன் முன்காண்
டிசையனைத்துந் தொழுதேத்தக் கலைமான் கையிற்
பொறுத்தான்காண் புகலிடத்தை நலிய வந்து
பொருகயிலை யெடுத்தவன்றன் முடிதோ ளொலைஞ்
சிறுத்தான்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன்கா ணவனென் னெண்ணத் தானே. ௧௧

திருச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

உரித்தவன்கா ணுரக்களிற்றை யுமையா ளொல்க
வோங்காரத் தொருவன்கா ணுணர்மெய்ஞ் ஞானம்
விரித்தவன்காண் விரித்தநால் வேதத் தான்காண்
வியனுலகிற் பல்லுயிரை விதியி ளுலே
தெரித்தவன்காண் சில்லுருவாயத் தோன்றி யெங்குந்
திரண்டவன்காண் டிரிபுரத்தை வேவ வில்லா
லெரித்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. க

பெருந்தவத்தெம் பிஞ்ஞகன்காண் பிறைசூ டிகாண்
பேதையேன் வாதையுறு பிணியைத் தீர்க்கு
மருந்தவன்காண் மந்திரங்க ளாயி னுன்காண்
வானவர்க டாம்வணங்கு மாதே வன்காண்
அருந்தவத்தா ளாயிழையா ளுமையாள் பாக
மமர்ந்தவன்கா ணமராகடா மர்ச்சித் தேத்த
விருந்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. ரு

உமையவளை யொருபாகஞ் சேர்த்தி னுன்காண்
உகந்தொளிசேர்க் கங்கைசடை யொழுக்கி னுன்கா
ணிமைய வடகயிலைச் செல்வன் முன்காண்
இல்பலிக்குச் சென்றுழலு நல்கூர்ந் தான்காண்
சமையமவை யாறினுக்குந் தலைவன் முன்காண்
தத்துவன்கா ணுத்தமன்காண் டானே யாய
இமையவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. எ

முந்தைகாண் மூவரினு முதலா னுன்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத்
தாதைகாண் டண்கடமா முகத்தி னூர்க்குத்
தாதைகாண் டாழ்ந்தடியே வணங்குவார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும்
எந்தைகா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. கூ

பொன்னிசையும் புரிசடையெம் புனிதன் முன்காண்
பூதகண நாதன்காண் புலித்தோ லாடை
தன்னிசைய வைத்தவெழி லரவி னுன்காண்
சங்கவெண் குழைக்காதிற் சதுரன் முன்காண்
மின்னிசையும் வெள்ளெயிற்றோன் வெகுண்டு வெற்பை
யெடுக்கவடி யடர்ப்பமீண் டவன்றன் வாயி
லின்னிசைகேட் டிலங்கொளிவா ளீந்தோன் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. க0

திருச்சிற்றம்பலம்

## ஆளுடைய நம்பிகள்

திருமுறை - 7 பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை யாதி யையம ரர்தொழு தேத்துஞ்
சீலந் தான்பெரி தும்முடை யானைச் சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
யேல வார்குழ லாளுமை நங்கை யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. க

திரியு முப்புரந் தீப்பிழம் பாகச் செங்கண் மால்விடை மேற்றிகழ் வானைக்
கரியி னீருரி போர்த்துகந் தானைக் காம னைக்கன லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாளுமை நங்கை மருவி யேத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை யெங்கள்பி ரானை காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௨

வெல்லும் வெண்மழு வொன்றுடை யானை வேலை நஞ்சுண்ட வித்தகன் றன்னை
யல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை யரும றையவை யங்கம்வல் லானை
யெல்லை யில்புக ழாளுமை நங்கை யென்று மேத்தி வழிபடப் பெற்ற
நல்ல கம்பனை யெங்கள்பி ரானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௫

எள்க வின்றி யிமையவர் கோனை யீச னைவழி பாடுசெய் வாள்போ
லுள்ளத் துள்கி யுகந்துமை நங்கை வழிப டச்சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி வெருவி யோடித் தழுவ வெளிப்பட்ட
கள்ளக் கம்பனை யெங்கள் பிரானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. க0

பெற்ற மேறுகந் தேறவல் லானைப் பெரிய வெம்பெரு மானென்றெப் போதுங்
கற்ற வர்பர வப்படு வானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக் குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன்
நற்ற மிழிவை யீரைந்தும் வல்லார் நன்னெ றியுல கெய்துவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## கச்சிப் பிறதளிகள்

## ஆளுடைய அரசுகள்

திருமுறை - 4 திருக்கச்சித் திருமேற்றளி பண் - திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மறையது பாடிப் பிச்சைக் கென்றகந் திரிந்து வாழ்வார்
பிறையது சடைமு டிமேற் பெய்வளை யாடன் னோடுங்
கறையது கண்டங் கொண்டார் காஞ்சிமா நகர்த னுள்ளா
லிறையவர் பாட லாட லிலங்குமேற் றளிய னாரே. க

மண்ணினை யுண்ட மாயன் றன்னையோர் பாகங் கொண்டார்
பண்ணினைப் பாடி யாடும் பத்தர்கள் சித்தங் கொண்டார்
கண்ணினை மூன்றுங் கொண்டார் காஞ்சிமா நகர்த னுள்ளால்
எண்ணினை யெண்ண வைத்தா ரிலங்குமேற் றளிய னாரே. எ

தென்னவன் மலையெ டுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு
மன்னவன் விரலா லூன்ற மணிமுடி நெரிய வாயாற்

கன்னலின் கீதம் பாடக் கேட்டவர் காஞ்சி தன்னுள்
இன்னவர்க் கருளிச் செய்தா ரிலங்குமேற் றளிய னாரே. க0

திருச்சிற்றம்பலம்

## ஆளுடைய நம்பிகள்

திருமுறை - 7 திருஓணகாந்தன்றளி பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு நித்தல் பூசனை செய்ய லுற்றாற்
கையி லொன்றுங் காண மில்லை கழல டிதொழு துய்யி னல்லால்
ஐவர் கொண்டிங் காட்ட வாடி யாழ்கு ழிப்பட் டழுந்து வேற்கு
உய்யு மாறென் றருளிச் செய்யீ ரோண காந்தன் றளியு ளீரே. க

திங்க டங்கு சடையின் மேலோர் திரைகள் வந்து புரள வீசுங்
கங்கை யாளேல் வாய்தி றவாள் கணப தியேல் வயிறு தாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை தேவி யார்கோற் றட்டி யாளார்
உங்க ளுக்காட் செய்ய மாட்டோ மோண காந்தன் றளியு ளீரே. உ

வாரி ருங்குழல் வாணெ டுங்கண் மலைம கள்மது விம்மு கொன்றைத்
தாரி ருந்தட மார்பு நீங்காத் தைய லாளுல குய்ய வைத்த
காரி ரும்பொழிற் கச்சி மூதூர்க் காமக் கோட்டமுண் டாக நீர்போ
யூரி டும்பிச்சை கொள்வ தென்னே யோண காந்தன் றளியு ளீரே. எ

ஓவ ணமே லெருதொன் றேறு மோண காந்தன் றளியு ளார்தா
மாவ ணஞ்செய் தாளுங் கொண்டு வரைந் திலொடு பட்டு வீக்கிக்
கோவ ணமேற் கொண்ட வேடங் கோவை யாகவா ரூரன் சொன்ன
பாவ ணத்தமிழ் பத்தும் வல்லார் பறையுந் தாஞ்செய்த பாவந் தானே. க0

திருச்சிற்றம்பலம்

திருமுறை - 7 திருக்கச்சி யனேகதங்காவதம் பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தேனெய் புரிந்துழல் செஞ்சடை யெம்பெரு மானதி டந்திக ழைங்கணையக்
கோனை யெரித்தெரி யாடி யிடங்குல வான திடங்குறை யாமறையா
மானை யிடத்ததொர் கைய னிடம்மத மாறுப டப்பொலி யும்மலைபோல்
யானை யுரித்தபி ரான திடங்கலிக் கச்சி யனேகதங் காவதமே. க

கூறு நடைக்குழி கட்பகு வாயன பேயுகந் தாடநின் றோரியிட
வேறு படக்குட கத்திலை யம்பல வாணநின் றடல் விரும்புமிடம்
ஏறு விடைக்கொடி யெம்பெரு மானிமை யோர்பெரு மானுமை யாள்கணவன்
ஆறு சடைக்குடை யப்ப னிடங்கலிக் கச்சி யனேகதங் காவதமே. உ

வீடு பெறப்பல வூழிகள் நின்று நினைக்கு மிடம்வினை தீருமிடம்
பீடு பெறப்பெரி யோர திடங்கொண்டு மேவினர் தங்களைக் காக்குமிடம்
பாடு மிடத்தடி யான்புக ழூர னுரைத்தவிம் மாலைகள் பத்தும் வல்லார்
கூடு மிடஞ்சிவ லோக னிடங்கலிக் கச்சி யனேகதங் காவதமே. க0

திருச்சிற்றம்பலம்

## ஆளுடைய பிள்ளையார்

திருமுறை - 3 கச்சிநெறிக்காரைக்காடு பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வாரணவு முலைமங்கை பங்கினரா யங்கையினிற்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப் பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. க

புற்றிடைவா ளரவினொடு புனைகொன்றை மதமத்த
மெற்றொழியா வலைபுனலோ டிளமதிய மேந்துசடைப்
பெற்றுடையா ரொருபாகம் பெண்ணுடையார் கண்ணமரு
நெற்றியினர் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. எ

கண்ணாருங் கலிச்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமான தடிவாழ்த்தி
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ் வல்லார் பரலோகத் திருப்பாரே. கக

திருச்சிற்றம்பலம்

---

## ஆளுடைய அடிகள்

திருமுறை - 8 திருவாசகம் திருப்பொற்சுண்ணம்

திருச்சிற்றம்பலம்

### கீர்த்தித் திருவகல்

* * * *

ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணொ டாயின பரிசும்

* * * *

### போற்றித் திருவகல்

* * * *

ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி

* * * *

காசணி மின்க ளுலக்கை யெல்லாங் காம்பணி மின்கள் கறையு ரலை
நேச முடைய வடிய வர்க ணின்று நிலாவுக வென்று வாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங் கச்சித் திருவேகம் பன்செம்பொற் கோயில் பாடி
பாச வினையைப் பறித்து நின்று பாடிப்பொற் சுண்ண மிடித்து நாமே. ௬

### திருப்பூவல்லி

படமாக வென்னுள்ளே தன்னிணைப்பாத மவையளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்ப மேயபிரான்
தடமார் மதிற்றில்லை யம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ. க௬

திருமுறை - 8 திருக்கோவையார்

வரைபொருட்பிரிவை யுரையெனக்கூறல்

*குன்றங் கிடையுங் கடந்துமர் கூறு நிதிகொணர்ந்து*
*மின்றங் கிடைநும்மை யும்வந்து மேவுவ னம்பலஞ்சேர்*
*மன்றங் கிடைமரு தேகம்பம் வாஞ்சிய மன்னபொன்னைச்*
*சென்றங் கிடைகொண்டு வாடா வகைசெப்பு தேமொழியே.* 268

*திருச்சிற்றம்பலம்*

---

## *பட்டினத்துப் பிள்ளையார்*

திருமுறை - 11 திருவேகம்பமுடையார் திருவந்தாதி

*திருச்சிற்றம்பலம்*

மெய்த்தொண்டர் செல்லும் நெறியறி யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலு நற்றொண் டுவந்தில னுண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புற மேயுன்னைப் போற்றுகின்ற
இத்தொண்ட னேன்பணி கொள்ளுதி யோகச்சி யேகம்பனே. க

*வணக்கந் தலைநின் திருவடிக் கேசெய்யு மையல்கொண்டோர்*
*இணக்கன்றி மற்றோர் இணக்கறி வோமல்லம் வல்லரவின்*
*குணக்குன்ற வில்லி குளிர்கச்சி யேகம்பம் பாடினல்லாற்*
*கணக்கன்று மற்றொரு தேவரைப் பாடுங் கவிநலமே.* எ

*தனமிட் டுமைதழு வத்தழும் புற்றவர் தம்மடியார்*
*மனம்விட் டகலா மதிற்கச்சி யேகம்பர் வான்கயிலைச்*
*சினம்விட் டகலாக் களிறு வினவியோர் சேயனையார்*
*புனம்விட் டகலார் பகலாம் பொழுதுநம் பூங்கொடியே.* கக

*அன்றும் பகையடர்க் கும்பரி மாவும் மதவருவிக்*
*குன்றும் பதாதியுந் தேருங் குலவிக் குடைநிழற்கீழ்*
*நின்றும் பொலியினுங் கம்பர்நன் னீறு நுதற்கிலரேல்*
*என்று மரசும் முரசும் பொலியா விருநிலத்தே.* ௬0

*நிலத்திமை யோரிற் றலையாய்ப் பிறந்து மறையொடங்கம்*
*வலத்திமைப் போதும் பிரியா ரெரிவளர்த் தாலும்வெற்பன்*
*குலத்துமை யோர்பங்கர் கச்சியு ளேகம்பங் கூடித்தொழும்*
*நலத்தமை யாதவர் வேட்டுவர் தம்மி னடுப்படையே.* ௬க

*படையா லுயிர்கொன்று தின்று பசுக்களைப் போலச்செல்லும்*
*நடையா லறிவின்றி நாண்சிறி தின்றி நருங்குலத்திற்*
*கடையாய்ப் பிறக்கினுங் கச்சியு ளேகம்பத் தெங்களையா*
*ளுடையான் கழற்கன்ப ரேலவர் யாவர்க்கும் உத்தமரே.* ௬உ

*துணைத்தா மரையடி யும்பவ ளத்திரள் நல்குறங்கும்*
*பணைத்தோ ளகலமுங் கண்டத்து நீலமு மண்டத்துமின்*
*பிணைத்தா லனசடை யுந்திரு முக்கண்ணும் பெண்ணொர்பக்கந்*
*தணைத்தா ரெழிற்கம்ப ரெங்கள் பிரானார்க் கழகியவே.* ௬௫

கிடக்கு மொருபா விரைக்கின்ற பாம்,பொரு பால்மதியந்
தொடக்குண் டிலங்கும், அலங்குந் திரைக்கங்கை, சூடுங்கொன்றை,
வடக்குண்டு கட்டத் தலைமாலை வாளால் மலைந்தவெம்போர்
கடக்கும் விடைத்திரு வேகம்பர் கற்றைச் சடைமுடியே. ௩௭

கற்றைப் பவளச் சடைவலம் பூக்கமழ் கொன்றையந்தார்
முற்றுற் றிலாமதி யின்கொழுந் தேகம்பர் மொய்குழலாம்
மற்றைத் திசையின் மணிப்பொற் கொழுந்தத் தரங்கழுநீர்
தெற்றிப் பொலிகின்ற சூட்டழ காகித் திகழ்தருமே. ௩௮

தருமருட் டன்மை வலப்பாற் கமலக்கண் ணெற்றியின்மேல்
திருமலர்க் கண்பிள வின்றிக முந்தழல் செல்வக்கம்பர்
கருமலர்க் கண்ணிடப் பாலது நீலங் கனிமதத்து
வருநுதற் பொட்டணங் குக்குயர்ந் தோங்கு மலர்க்குழலே. ௩௯

மலர்ந்த படத்துச்சி யைந்தினுஞ் செஞ்சுடர் மாமணிவிட்
டலர்ந்த மணிக்குண் டலம்வலக் காதினி லாடிவரும்
நலந்திரு நீள்வயி ரம்வெயிற் பாய நகுமணிகள்
கலந்தசெம் பொன்மக ரக்குழை யேகம்பர் காதிடமே. ௪0

காதலைக் கும்வலத் தோள்பவ ளக்குன்ற மங்குயர்ந்து
போதலைக் கும்பணிப் பொன்மலை நீற்றின் பொலியகலந்
தாதலைக் குங்குழல் சேர்பணைத் தோணறுஞ் சாந்தணிந்து
சூதலைக் கும்முலை மார்பிட மேகம்பர் சுந்தரமே. ௪௧

தரம்பொற் பழியு முலகட்டி யெய்த்துத் தரந்தளரா
வுரம்பொற் புடைய திருவயி றும்வலம் உம்பர்மும்மைப்
புரம்பொற் பழித்தகம் பர்க்குத் தரத்திடு பூண்முலையும்
நிரம்பப் பெருகு தளரிள வஞ்சியும் நேர்வுடைத்தே. ௪௨

உடைப்புலி யாடையின் மேலுர கக்கச்சு வீக்கிழிஞ்சி
வடத்தொரு கோவணந் தோன்று மரைவலம் மற்றையல்குல்
தொடக்குறு காஞ்சி தொடுத்த வரசிலை தூநுண்டுகில்
அடற்பொலி யேறுடை யேகம்ப மேய வடிகளுக்கே. ௪௩

அடிவலப் பாலது செந்தா மரையோத் ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற் கூற்றி னெருத்திற வைத்த திளந்தளிரின்
அடியிடப் பாலது பஞ்சுற வஞ்சுஞ் சிலம்பணிந்த
வடிவுடைத் தார்கச்சி யேகம்ப மேய வரதருக்கே. ௪௪

இனியவ ரின்ன ரவரையொப் பார்பிற ரென்னவொண்ணாத்
தனியவர் தைய லுடனு முருவ ரறம்பணித்த
முனியவ ரேறு முகந்தமுக் கண்ணவர் சண்டி யன்புக்
கினியவர் காய்மழு வாட்படை யார்கச்சி யேகம்பரே. ௪௮

இழையா ரரவணி யேகம்பர் நெற்றி விழியின்வந்த
பிழையா வருள்நம் பிராட்டிய தின்ன பிறங்கலுன்னும்
நுழையா வருதிரி சூலத்தள் நோக்கரும் பொன்கடுக்கைத்
தழையார் பொழிலுது பொன்னே நமக்குத் தளர்வில்லையே. ௮௪

தளரா மிகுவெள்ளங் கண்டுமை யோடித் தமைத்தழுவக்
கிளையார் வளைக்கை வடுப்படு மீங்கோர் கிறிப்படுத்தார்
வளமாப் பொழிற்றிரு வேகம்பர் மற்றிது வந்திறைஞ்சி
உளரா வதுபடைத் தோமட வாயிவ் வுலகத்துள்ளே. அடு

உயிரா யினவன்பர் தேர்வரக் கேட்டுமுன் வாட்டமுற்ற
பயிரார் புயல்பெற்ற தென்னநம் பல்வளை பான்மைகளாந்
தயிர்பால் நெய்யொடு மாடிய வேகம்பர் தம்மருள்போல்
கையிரா வளையமுந் தக்கச் சிறுத்தன கார்மயிலே. கூ0

இன்றுசெய் வோமித னிற்றிரு வேகம்பர்க் கெத்தனையும்
நன்றுசெய் வோம்பணி நாளையென் றுள்ளிநெஞ் சேயுடலிற்
சென்றுசெ யாரை விடுந்தனை நாளும் விடாதடிமை
நின்றுசெய் வாரவர் தங்களின் நீணெறி காட்டுவரே. கூஅ

காட்டிவைத் தார்தம்மை யாங்கடிப் பூப்பெய்யக் காதல்வெள்ளம்
ஈட்டிவைத் தார்தொழு மேகம்ப ரேதுமி லாதவெம்மைப்
பூட்டிவைத் தார்தமக் கன்பது பெற்றுப் பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத் தார்பர வித்தெழு தாமவர் பாதங்களே. கூகூ

பாதம் பரவியோர் பித்துப் பிதற்றிலும் பல்பணியு
மேதம் புகுதா வகையரு ளேகம்ப ரேத்தெனவே
போதம் பொருளாற் பொலியாத புன்சொற் பனுவல்களும்
வேதம் பொலியும் பொருளா மெனக்கொள்வர் மெய்த்தொண்டரே. க00

திருச்சிற்றம்பலம்

---

## சேக்கிழார்நாயனர்

12-ம் திருமுறை — திருத்தொண்டர்புராணம்

### திருமலைச் சிறப்பு

எம்பி ராட்டியிவ் வேழுல கீன்றவள்
தம்பி ரானைத் தனித்தவத் தாலெய்திக்
கம்பை யாற்றில் வழிபடு காஞ்சியென்
றும்பர் போற்றும் பதியு முடையது. ௩௪

திருமூலதேவர்,

### திருவேகம்புரம் தரிசித்தது

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
ஆடுதிரு வரங்கான வாலவனந் தொழுதேத்தி
தேடுமிரு வர்க்கரியார் திருவேகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மதிற்காஞ்சி வளநகரின் வைகினர். ரு

நற்பதியங் கமர்யோக முனிவர்களை நயந்துபோய்க்
கற்புரிசைத் திருவதிகை கலந்திறைஞ்சிக் கறைக்கண்டர்
அற்புதக்கூத் தாடுகின்ற வம்பலஞ்சூழ் திருவீதிப்
பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் வந்தணைந்தார். சா

—திருமூலதேவநாயனர்புராணம்

திருஞானசம்பந்த நாயனர்,

### திருவேகாம்பரம் தரிசித்தது

செம்பொன்மலைக் கோடிதழுவக் குழைந்தருளுந் திருமேனிக்
கம்பரைவந் தெதிர்வணங்குங் கவுணியர்தங் காவலனார்
பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்துமயிர்ப் புளகம்வரத்
தம்பெருகு மனக்காதல் தள்ளநில மிசைத்தாழ்ந்தார். 994

பலமுறையும் பணிந்தெழுந்து பங்கயச்செங் கைமுகிழ்ப்ப
மலருமுக மளித்ததிரு மணிவாயான் "மறையா" னென்
றுலகுய்ய வெடுத்தருளி யுருகியவன் பென்புருக்க
நிலவுமிசை முதற்றாள நிரம்பியசீர் மையினிகழ. 995

பாடினார் பணிவுற்றார் பரிவுறுமா னந்தக்கூத்
தாடினா ரகங்குழைந்தா ரஞ்சலிதஞ் சென்னியின்மேற்
சூடினார் மெய்ம்முகிழ்த்தார் சூகரமு மன்னமுமாய்த்
தேடினா ரிருவருக்குந் தெரிவரியார் திருமகனார். 996

மருவியவே ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பாற்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார்
உருகியவன் புள்ளலைப்ப வுமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார். 997

### திருக்காமக்கோட்டம் தரிசித்தது

புறத்தணைந்த தொண்டருடன் போந்தமைந்த திருமடத்திற்
பெறற்கரும்பே றுலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார்
மறப்பரிய காதலுடன் வந்தெய்தி மகிழ்ந்துறைவார்
அறப்பெருஞ்செல் வக்காமக் கோட்டமணைந் திறைஞ்சினார். 998

### காஞ்சியிலுள்ள பிற தளிகளைத் தரிசித்தது

நீடுதிரு பொழிற்காஞ்சி நெறிக்காரைக் காடிறைஞ்சிச்,
சூடுமதிக் கண்ணியார் துணைமலர்ச்சே வடிபாடி,
ஆடுமவ ரினிதமரு மனேகதங்கா வதம்பரவி,
மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள், 1000

எண்டிசையும் போற்றிசைக்குந் திருப்பதிமற் றதன்புறத்துத்
தொண்டருட னினிதேகித் தொல்லைவிட முண்டிருண்ட
கண்டர்மகிழ் மேற்றளியும் முதலான கலந்தேத்தி
மண்டுபெருங் காதலினால் வணங்கிமீண் டினிதிருந்தார். 1001

—திருஞானசம்பந்தநாயனார்புராணம்

திருநாவுக்கரசு நாயனர்,

### திருவேகாம்பரம் தரிசித்தது

திருவா யிலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலையணைந்து
கருவார் கச்சி யேகம்பர் கனக மணிமா ளிகைசூழ்ந்து
வருவார் செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணிமேனிப்
பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப் பேரா வன்பு பெருக்கினார். ௩௨௨

வார்ந்து சொரியுங் கண்ணருவி மயிர்க்கா லூறும் வரும்புளக
மார்ந்த மேனிப் புறம்பலைப்ப வன்பு கரைந்தென் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத் திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தி லுறவைத்து நீடும் பதிகம் பாடுவார். ௩௨௩

"ஏகம்பன் காணவனென் னெண்ணத் தா"னெனப் போற்றிப்
பாகம்பெண் ணுருவானைப் பைங்கண்விடை யுயர்த்தானை
நாகம்பூ ணுகந்தானை நலம்பெருகுந் திருநீற்றின்
ஆகந்தோ யணியானை யணைந்துபணிந் தின்புற்றார். ௩௨௮

காஞ்சியிலுள்ள பிற தளிகளை தரிசித்தது

சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலாம்
நீர்மருவுஞ் சடைமுடியார் நிலவியுறை யாலயங்க
ளார்வமுறப் பணிந்தேத்தி யார்ந்ததமிழ்ச் சொன்மலராற்
சார்வுறுமா லைகள்சாத்தித் தகுந்தொண்டு செய்திருந்தார். ௩௨௬

—திருநாவுக்கரசுநாயனார் புராணம்

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி நாயனர்,

முதல் முறை திருவேகம்பரம் தரிசித்தது

கைகள் கூப்பி முன்னணைவார் கம்பை யாறு பெருகிவர
ஐயர் தமக்கு மிகவஞ்சி யாரத் தழுவிக் கொண்டிருந்த
மையு லாவுங் கருநெடுங்கண் மலையா ளென்னும் வழிபடுபூஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்து காத லுடன்வீழ்ந்தார். (ஏயர் - ௧௮௮)

வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி யெழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறு விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவு நாளிற் றொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையா ராலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்குவார், ௧௮௯

திருக்காமக் கோட்டமும் பிற தளிகளும் தரிசித்தது

சீரார் காஞ்சி மன்னுதிருக் காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி,
நீரார் சடையா ரமர்ந்தருளு நீடு திருமேற் றளிமேவி,
யாரா வன்பிற் பணிந்தேத்து மளவி "னுந்தா வொண் சுட"ராம்
பாரர் பெருமைத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினார். ௧௯0

காஞ்சியிலுள்ள பிற தளிகளைத் தரிசித்தது

ஓண காந்தன் றளிமேவு மொருவர் தம்மை யுரிமையுடன்
பேணி யமைந்த தோழமையாற் பெருகு மடிமைத் திறம்பேசிக்
காணமோடு பொன்வேண்டி "நெய்யும் பாலும்" கலைவிளங்கும்
யாணர்ப் பதிக மெடுத்தேத்தி யெண்ணி னிதிபெற் றினிதிருந்தார். ௧௯௧

அங்க ணமர்வா ரநேகதங்கா வதத்தை யெய்தி யுள்ளணைந்து
செங்கண் விடையார் தமைப்பணிந்து "தேனெய் புரிந்"தென் றெடுத்ததமிழ்

"தங்கு மிடமா" மெனப்பாடித் தாழ்ந்து பிறவுந் தானங்கள்
பொங்கு காத லுடன்போற்றிப் புரிந்தப் பதியிற் பொருந்துநாள். ககஉ

—ஏயர்கோன்கலிக்காம நாயனார் புராணம்

### இரண்டாம் முறை தரிசித்தது

தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தில்
ஊனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினா
லானதிரு வறம்புரக்கு மம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்றொண்டர்; உஅச

தொழுதுவிழுந் தெழுந்தருளாற் றுதித்துப்போய்த் தொல்லுலகம்
முழுதுமளித் தழித்தாக்கும் முதல்வர்திரு வேகம்பம்
பழுதிலடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்றார்
"இழுதையேன் திருமுன்பே யென்மொழிவே" னென்றிறைஞ்சி, உஅரு

"விண்ணாள்வா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா! கச்சியே கம்பனே! கடையானே
னெண்ணாத பிழைபொறுத்திங் கியான்காண வெழிற்பவள
வண்ணா! கண் ணளித்தருளா" யெனவீழ்ந்து வணங்கினார். உஅசு

பங்கயச்செங் கைத்தளிராற் பணிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தஇடக் கண்கொடுத்தார். உஅஎ

ஞாலந்தா னிடந்தவனும் நளிர்விசும்பு கடந்தவனும்
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
"தாலந்தா னுகந்தவ" னென் றெடுத்தாடிப் பாடினார். உஅஅ

மாமலையாள் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தமதிப்
பூமலிவார் சடையாரைப் போற்றியரு ளதுவாகத்
தேமலிவார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பரவி. உகO

திருச்சிற்றம்பலம்

---

## காஞ்சிப் புராணம்

### விகடசக்கர விநாயகக் கடவுள்

விழிமலர்ப்பூ சனையுஞற்றித் திருநெடுமால் பெறுமாழி மீள வாங்கி
வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி முடைநாற்ற மாறு மாற்றாற்
பொழிமதநீர் விரையேற்றி விகடநடப் பூசைகொண்டு புதிதா நல்கிப்
பழிதபுதன் றுதையினும் புகழ்படைத்த மதமாவைப் பணிதல் செய்வாம்.

சபாநாயகர்

சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு மறைக்கோவுந் தழல்கால் சூல
மங்கேந்து மம்மானுந் தத்தமது தொழிற்றலைநின் முற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்.

ஏகம்பநாதர்

தணந்தபெருந் துயர்க்கடன்மீக் கூர்தலினுன் மலைபயந்த தரள மூரற்
கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந் தரியாம லிடையே கம்பை
யணங்கினைத்தூ தெனவிடுத்து வலிந்திறுகத் தழீக்கொள்ள வமையாக் காதன்
மணந்தருளிக் குறிபூண்ட வொருமாவிற் பெருமானை வணக்கஞ் செய்வாம்.

காமாட்சியம்மையார்

ஊன்பிலிற்று மழுவாளி கலவிதனி லொண்ணுதென் றேர்ந்து நஞ்சந்
தான்பிலிற்றும் பாப்பணியை நீப்பவுங் கார்வண்டினங்க டதைந்து மூசத்
தேன்பிலிற்று நறுங்கடுக்கைத் தெரியலைப்பாம் பெனமருண்டத் தெரிய லுறுங்
கான்பிலிற்றத் தெருண்டணையுங் காமக்கோட் டத்துமையைக் கருத்துள் வைப்பாம்.

---

## காஞ்சீபுரத் திருப்புகழ்

அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி யறியாத
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்பு கழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடி
சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து
தெரிவைமார்க் குச்சொ ரிந்து அவமேயான்
திரியுமாக் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோ க்ஷத்தை யென்று அருள்வாயோ
இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம்வேற் றுப்பி ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தான்
இருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சொ லுடையானே
குறவர்கூட் டத்தில் வந்து கிழவனாய்ப் புக்கு நின்று
குருவியோட் டித்தி ரிந்த தவமானைக்
குணமதாக் கிச்சி றந்த வடிவுகாட் டிப்பு ணர்ந்த
குமரகோட் டத்த மர்ந்த பெருமானே.

*மயலோது மந்த நிலையாலும் வஞ்ச*
*வசைபேசு கின்ற மொழியாலும்*
*மறிபோலு கின்ற விழிசேரு மந்தி*
*மதிநேரு கின்ற நுதலாலும்*

*அயிலே நிகர்ந்த விழியாலு மஞ்ச*
*நடையாலும் அங்கை வளையாலும்*
*அறிவே யழிந்து அயர்வாகி நைந்து*
*அடியேன் மயங்கி விடலாமோ ;*

*மயிலேறி யன்று கொடிபோதி லண்டம்*
*வலமாக வந்த குமரேசா !*
*மறிதாவு செங்கை யரனு ரிடங்கொள்*
*மலைமாது தந்த முருகேசா !*

*நயவா னுயர்ந்த மணிமாட மும்பர்*
*நடுவே நிறைந்த மதிசூழ*
*நறைவீசு கும்ப குடமேவு கம்பை*
*நகர்மீத மர்ந்த பெருமாளே.*

**சைவத்தேய்வத் திருமுறைத்திரட்டு முற்றிற்று.**



உ

# திருக்குறிப்புத்தொண்டநாயனர் புராணம்

(உரையுடனும் படங்களுடனும்)

" உந்திநின்ரு ருன்ற ஞேலக்கச் சூளேகள் வாய்தல்பற்றித்
துன்றிநின்ருர் தோல்லே வானவ ரீட்டம் பணியறிவான்
வந்துநின் ருரய னுந்திரு மாலு மதிட்கச்சியாய் !
இந்தநின் ருேமினி யெங்ஙன மோவந் திறைஞ்சுவதே "

—திருவிருத்தம் - அப்பர் சுவாமிகள்

" மெய்த்தொண்டர் செல்லு நெறியறி யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலு நற்ருேண் டுவந்தில னுண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புற மேயுன்னேப் போற்றுகின்ற
வித்தொண்ட னேன்பணி கொள்ளுதி யோகச்சி யேகம்பனே ! "

—திருவேகம்பமுடையார் திருவந்தாதி (1) - 11-ம் திருமுறை -
பட்டினத்துப் பிள்ளேயார்

பதிப்பாசிரியர் - C. K. சுப்பிரமணிய முதலியார்

உ

சிவமயம்

# 19. திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம்



"கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரே காலிக்
குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் நமக்கின்று தாரீ ராகின்
வருந்துமுட லெனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதொழிய மழையு மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேற்
சிந்தமுடி புடைப்பளவிற் றிருவே கம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னாரே"

—திருத்தொண்டர்புராணசாரம் (21)

தொகை

"திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்"

—திருத்தொண்டத்தொகை.

வகை

"மண்டும் புனற்சடை யான்றமர் தூசேற்றி வாட்டும்வகை
விண்டு "மழைமுகில் வீடா தொழியின்யான் வீவனென்று
மிண்டும் படர்பாறை முட்டு மெழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி யேகா லியர்தங்க டொல்குலமே"

—திருத்தொண்டர் திருவந்தாதி (21)

விரி

1078. ஏயு மாறுபல் லுயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய னாடனி யாயின தலைவரைத் தழுவ
வாயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவஞ் செய்தது தொண்டைநன் னாடு.

புராணம் :—திருக்குறிப்புத்தொண்டர் என்னும் பெயருடைய நாயனாரது சரித வரலாறும் பண்பும் கூறும் பகுதி. இனி, நிறுத்தமுறையானே மும்மையாலுலகாண்ட சருக்கத்து ஐந்தாவது திருக்குறிப்புத்தொண்டநாயனாரது சரிதங்கூறத் தொடங்குகின்றார்.

தொகை :—திருக்குறிப்புத்தொண்ட நாயனாருடைய அடியவர்களுக்கு நான் அடியேனாவேன். இந்நாயனாரது பெயரும் சரிதக்குறிப்பும் பண்பும் முதனூல் பேசிற்று. சிவனடியார்களுடைய குறிப்பினையறிந்து அவர் கருத்தின்படி அவருக்குத் தொண்டு பூண்டு ஒழுகியதனால் இவருக்கு இப்பெயராயிற்றென்பது விரிநூல் 1191-ல் "புண்ணிய மெய்த் தொண்டர்திருக் குறிப்பறிந்து போற்றுநிலைத், திண்மையினாற் றிருக்குறிப்புத் தொண்டரெனும் சிறப்பினார்" எனக் கூறப்பட்டது. இக்காரணங் கொண்டே இறைவர் இவர்பால் அழுக்கடைந்த கந்தை தாங்கிவர, அவரது குறிப்பறிந்து கந்தையினைக் கழுவுதற்கு வேண்டிப் பெற்றனர் என்பதும், அது காரணமாக இவர் சரிதம் விளைந்து திருவருள் வெளிப்பட்டது என்பதும் அறியப்படும். "குறிப்பறிந்தே" (1197) என்றது காண்க. இவ்வாற்றால் சரிதக்குறிப்பும் கண்டுகொள்க.

வகை :—செறிந்த கங்கைப்புனலையுடைய சடையாரின் அடியாரது ஆடைகளின் அழுக்கைப் போக்கி உலரவைத்தற்கு "இடையூறாக வந்து சூழ்ந்த மழைமுகில் நிற்காதொழிந்தால் நான் இறப்பேன்" என்று துணிந்து வலிய கற்பாறையில் தமது தலையை முட்டிய அழகிய திருக்குறிப்புத் தொண்டரது திருக்குலமானது கச்சிமா நகரிலே ஏகாலியர்களது பழய குலமாகும்.

**சடையான்றமர்** - தமர்போலக் கோலந்தாங்கி வந்த சடையான் என்க. விரிநூல் (1195) பார்க்க. **மண்டுதல்** - செறிந்து நிறைதல் என்று கொள்க. **தமர்** - தம்மவர். உகந்தவர். **தூசு** - துணி. **எற்றுதல்** - தோய்த்து அழுக்குப் போக்குதல். **வாட்டுதல்** - ஈரம்புலர உலர்த்துதல். **முகில் வீடாதொழியின்** - முகில் மழை பெய்தலை நிறுத்தாதொழிந்தால்; **யான் வீவன்** - விரிநூல் (1203 - 1204) பாட்டுக்களில் இது விரிக்கப்பட்டது. **பாறை முட்டுதல்** - கந்தையுடைத் திடவெற்றுங் கற்பாறை மிசைத் தந்தலையினைச் சிந்தும்படி மோதுதல். **எழில்** - திருத்தொண்டின் உறைப்பு **எழில்** எனப்பட்டது; இதுவே உயிர்க்குறுதி செய்தலால். "சிங்காரமான திருவடி" (திருமந்திரம்) என்றதுபோல. தொண்டர்குலம் ஏகாலியர் தொல்குலம் என்க. பெயர்ப்பயனிலை கொண்டது. நாயனாரது ஊரும், பெயரும், மரபும், சரிதவரலாறும், பண்பும், பிறவும் வகைநூல் வகுத்துக் காட்டிற்று. இவை விரிந்தபடி விரிநூலுட் காண்க.

1078. (இ - ள்) வெளிப்படை. பொருந்தும்படி பல உயிர்களுக்கும் எல்லையில்லாத கருணைத் தாய்போன்ற உமாதேவியார் தனியாகிய தமது தலைவரைத் தழுவுதற்காக, ஆராய்கின்ற நான்கு வேதங்களும் போற்ற ஆகமவழியில் நின்று, தன்னிடத்தே அரிய தவம்புரியும்படியான தூய பெருந்தவத்தைச் செய்துள்ளது **தொண்டை நன்னாடு.**

1078. (வி - ரை) **பல்லுயிர்களுக்கும் ஏயுமாறு** என்க. எல்லா வுயிர்களுக்கும் அவ்வவற்றின், கன்மத்திற்கேற்றபடி பொருந்த. எல்லையில்லாத கருணையேயாயினும் உயிர்தோறும் வெவ்வேறு வகைபடச் செலுத்தப்படுதற்குக் காரணங் கூறியபடியாம். **கருணைத் தாயனாள்** - உலகில் தாய்மார், மகவுக்கு நோய் மூலமாகிய உடம்பைக் கொடுத்து ஊட்டி வளர்த்து மீண்டும் பல உடற் சுமைகளை எடுக்க வழிசெய்கின்றார்கள். இத்தாய், நோய் நீங்கும்படி உடலைக் கொடுத்துக், கர்மங்களை ஊட்டிப் போக்கி, மீண்டும் உடற்சுமைவந்து பொருந்தாதபடி செய்கின்றாராதலின் இவ்வாறு சிறப்பித்தார்.

**தனியாயின தலைவர்** - தனி - ஒப்பற்றவர். உமையம்மையாரைப் பிரிந்ததனால் தனியாயினவர் என்றலும் இங்கு இச்சரிதக் குறிப்பிற் பொருந்துவதாம்.

**தழுவுதல்** - இங்குப், பிரிந்த தலைவர் சேர்தலைக் குறித்தது. **தழுவத் தாயனுள் தவம் புரிய மாதவம் புரிந்தது** தொண்டை நாடு என்று முடிவு கொள்க. தன்னிடமாக என்பது வருவிக்க.

**நாடு மாதவம் செய்தது** - ஆகமத்தின்வழிப் பூசனை செய்ய வேண்டுமென்று அம்மையார் வேண்டியபோது அதற்கேற்ற தலம் காஞ்சியே என்று இறைவரருளினர். (1032). அந்தக் காஞ்சியினைத் தன்னிடத்தே கொள்ளத் தொண்டைநாடு புண்ணியம் பண்ணிற்று என்க. நாடு புண்ணியம் செய்ததாவது அந்நாட்டினில் பெருஞ் சிவதருமங்கள் பொருந்தி உயிர்களுக்கு நலம்தந்து பெருகுமாறு செய்த தவமாம். நாடு செய்த தவத்தைக் குறிஞ்சி முதலாக நெய்தலீறாக வேறு வேறு கூறி, "குறிஞ்சி செய் தவங்குறை யுளதோ" (1073), "நெய்த லெய்தமுன் செய்தவந் நிறைதவஞ் சிறிதோ" (1119) என நுணுகிக் காட்டிய திறம் காண்க.

**ஆயும் நான்மறை போற்ற நின்று** - ஆய்தல்-தெளிதல். மறைகள் இறைவனிலக் கணத்தை ஆய்ந்து சிவனே பொருள் எனத் தெளிந்து இதயத்துட் கொண்டன. 1034 - 1037 பார்க்க. கொண்டு வைத்த அப்பொருளைப் பூசித்து அடையும் வழியினை உயிர்களுக்கு நடந்துகாட்டும் பொருட்டுப் பல் உயிர்களுக்கும் கருணைத்தாய் பூசை செய்த அதனை மறை போற்றிற்று. **நின்று** - அந்த ஒழுக்கத்தின் வழிநின்று ஒழுகி.

**பெருந்தவம் புரிய** - தழுவப்புரிந்த தவமும் பூசையும் 1135 முதல் 1142 வரை திருப்பாட்டுக்களில் விரித்துரைக்கப் பெற்றன.

**தொண்டை நன் நாடு** - **நன்மை** - இடத்துக்கேற்பதாகிய இடைப்பிறவரல். இந்நன்மையாவது மக்கள் நல்லொழுக்கத்தில் வழுவாது வாழ்வதேயாகும் என்பதனை மேல் வரும்பாட்டில் உடன்பாட்டு முகத்தால் விளக்குகின்ற ஆசிரியர், பின்னர், இதுபற்றி எதிர்மறை முகத்தால் "தீயவென்பன கனவிலு நினைவிலாச் சிந்தை" என 1126-ல் விளக்கி வற்புறுத்துதலும் காண்க. "மெய்ம்மைநிலை வழுவாத மேன்மை நிலை விழுக்குடிமைச், செம்மையினார்" என்றதும், பிறவும் நினைவு கூர்க. "தெண் ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோ ருடைத்து" என்று பிற்காலத்து ஆசிரியர் நாடுகளை வகைப்படுத்தி முடித்துக் காட்டியதும் உன்னுக.

இது முதல் ஐந்து திருப்பாட்டுக்களால் நாயனாரது திருநாட்டுப் பெருமையும், 1083 முதல் 1126 வரை நாட்டினியலும் வளமுங் கூறுகின்றார். இவ்வாறு அத்திரு நாடு முற்றிலும், நம் கருத்தினை உடன்கொண்டு, நானிலப் பகுதிகளையும் திணைக்கலப்புப் பகுதிகளையும் அவ்வவை யெல்லாம் சிவபுண்ணியப் பெருவாழ்வினைத்தரும் வகையினை யும் காட்டிச் செல்கின்றனர் ஆசிரியர். அதன்மேல் இந்நாயனாரது நகரமாகிய காஞ்சி புரத்தின் சிறப்பும் வளனும் 1127 முதல் 1189 வரை நகரச்சிறப்பாகக் கூறுகின்றார். அதன்மேல் 1190 முதல் 1207 வரை நாயனாரது சரிதங்கூறி முடிக்கின்றார். இவ்வாறு இப்புராணத்தின் அமைப்பினை வரையறுத்துக் கண்டுகொள்க.

தொண்டை நாட்டினைக் கூற நேர்ந்த முதலிடம் இதுவேயாதலின் இங்கு அதனை விரித்துக் கூறினார். சரிதத்தின் அளவுக்குமேல் விரிந்தபடியாக நாடு நகர் வர்ணனை கூறப்பட்டதென்றும், இஃது ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் தமது நாட் டின்மேல் வைத்த அன்பினாலாகியது என்றும் கருதுவாரும் உண்டு. அது ஓரளவுக்கு உண்மையே என்று தோன்றினும், புராணம் பாடுவித்த சோழர்களது நாடாகவும் பெரிய நகராகவும் தொண்டைநாடும் காஞ்சீபுரமும் விளங்கின என்பதனையும், திருத் தொண்டர்புராணத்தினும் ஏனைச்சோழ பாண்டிய நாடுகளைக் கூறிய இடங்களைத்

தொகுத்து நோக்கின் இங்குத் தொண்டைநாட்டுக்குக் கூறிய அளவு சிறியதே யாகும் என்பதனையும் நாம் மறக்கலாகாது. அன்றியும் அன்பர் திருவேடமும் பூசையுமே முடிந்த பொருள்களாகக் காட்டி விளக்கும் இம்மாபெருங் காவியத்தினுள், சிறந்த அரன்பூசையினை ஆகமவிதிப்படி உலகை ஆளுடையாள் செய்து காட்டும் இடம் இதுவேயாதலின் அதனை விரித்துக் கூறுதலும் இன்றியமையாததாயிற்று. அதனை எடுத்துக் காட்டுதற்கு, யாண்டும் நாட்டுச் சிறப்பும் வளமும் என்று சொல்லத் தக்கவை யாவும் சிவன் சம்பந்தத்தோடு கூடிய வழியே சிறப்புடையன - அல்லுழி அல்ல - என்பதனையும் எடுத்துக் காட்டவேண்டிய அவசியம்பற்றி நானிலப் பகுதிகளை அச்சிறந்த பொருள்பற்றிக் காட்டவேண்டுவதும் இன்றியமையாததாயிற்று. நானிலப் பகுதிகளைக் கூறும் வகையில் சிறந்த காவிய நிலைபற்றித் தமிழ் இலக்கண முறையிற் பகுத்துக் காட்டுவதும் வேண்டப்பட்டது. மேலும் நானிலப்பகுதிகளும் நிலக் கலப் புக்களும் நிறையப் பெற்று விளங்குவது இத்திருநாடேயாகும். இம்மாபுராணத்துள் பேசப்படும் ஏனைநாடுகள் அவ்வகையில் ஒவ்வோர் குறைபாடுடையன. ஆதலின் இச்சரி தத்தின் திருநாடே தமிழிலக்கிய வரம்பிற்கு எடுத்துக்காட்டாதற் றகுதியுடையதாம். இவை முதலிய காரணங்களால், நாட்டுப்பற்று (தேசாபிமானம்) என்று வெறும் நிலம்பற்றிய தொடர்பினால் ஆசிரியர் இத்துணையும் கூற அமைந்தனரல்லர் என்பதனை உய்த்துணர்ந்துகொள்க. அன்றியும் இதனால் நாடும் நகரமும் மக்களும் எவ்வாறிருத் தல் வேண்டும் - எவ்வகையால் மதிக்கப்படுதல்வேண்டும் - என்று எடுத்துக்காட்டிய திறமும் சிந்திக்க.

இதனுள் ஆகமத்திறனெலாம் தெரிய எடுத்துக்கூறிச் சிவபூசையில் முயற்சி யெழுவிக்கும் இப்பகுதியை, (ஐஞ்சீருடைய) கலிநிலைத்துறையாலும், அதன்மேல் எண்குணனாகிய அட்டமூர்த்தியினைப் பூசைசெய்தலையும் பகுதியை எண்சீர் விருத்தத்தாலும், சரியையாதி நாற்பாத நெறியில் நின்று பிறவிமாசுபோக்கும் சரிதத்தை நாற்சீர் விருத்தமாகிய கொச்சகக் கலிப்பாவினாலும் யாத்த திறமும் கண்டுகொள்க. 1

1079. நன்மை நீடிய நடுநிலை யொழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மை யோங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
றொன்மை மேன்மையி னிகழ்வது பெருந்தொண்டை நாடு. உ

(இ - ள்) வெளிப்படை. நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்தில் விருப்பமுடைய தன்மை வாய்ந்த தலைமையுடைய பெருங்குடிகள் தழைத்தோங்க, வலிய பெரிய மதில்களையுடைய வளநகரங்கள் பலவும் தன்னுள்ளே நிலவப்பெற்றதாய், எல்லை யில்லாத பழமையாகிய மேம்பாடுகளுடன் நிகழ்வது பெருந்தொண்டை நாடாகும்.

(வி - ரை) நடுநிலை ஒழுக்கம் - தமர்பிறர் என்னாமலும், நன்றுதீது என்னாமலும், அறநெறியினிற் பிறழாமலும் துலைக்கோல்போல ஒழுகுதல். "மாற்றூர்க் கமரி லழிந் துள்ளோர் வந்து தம்பான் மாநிதியம், ஆற்றும் பரிசு பேசினா லதனைநடுவு நிலைவைத் துக், கூற்ற மொதுங்கு மாள்வினையாற் கூலி யேற்று" (3) என்ற முனையடுவார் நாயனார் புராணங் காண்க.

**தலைமைசால் பெருங்குடி** - ஒழுக்கத்திற் சிறந்த சால்புடைமையால் தலைமை பெற்ற குடிகள். இத்தன்மையாவது வாய்மையும், பிறர்க்கு எஞ்ஞான்றும் நினைப்பி னாலும் தீமை செய்யாமையுமாம்.

**வளம்பதி பயின்றது** - வளமையுடைய நகரங்கள் நிலவுதல் நாட்டிற்குச் சிறப்புத் தருவதாம்.

**தொன்மை மேன்மை** - ஆவதும் அழிவதும் ஆகிய புதிய வளங்கள் மேன்மை தருவன அல்ல என்பது. பழங்கால முதல் மேன்மை குறையாது வருதல் உண்மைச் சிறப்பால்மட்டு மாகுவதொன்று என்க.

**தகைமைசால்**—என்பதும் பாடம். 2

1080. நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் முயிரையும் வணிகனுக் கொருகாற்
சொற்ற மெய்ம்மையுந் தூக்கியச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையி னிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு. ௩

(இ - ள்) வெளிப்படை. நல்ல திறத்தினையே விரும்பிய **பழையனூர்** வேளாளர்கள் தம்மேற் குற்றம் வந்தபோது தங்களுடைய உயிரையும், வணிக னொருவனுக்கு ஒருதரம் தாங்கள் சொல்லிய உண்மைச் சொல்லையும் தூக்கி, உயி ரினும் சிறந்த அந்தச் சொல்லையே காக்கப்பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது **பெரிய தொண்டை நாடாகும்.**

(வி - ரை) **நல் திறம் புரி** - நன்மையினையே விரும்பிய. இங்குக் குறித்த பழஞ் சரிதத்தினுள் வேளாளர்கள் வணிகனும் அவன் மனைவியும் மனமொத்து வாழ்தல் வேண்டுமென்ற நன்மையினையே விரும்பிய செய்தி குறித்தது. இவ்வாறன்றி எப்போதும் நன்மையினையே விரும்புகின்ற என்றலுமாம்.

**பழையனூர்ச் சிறுத்தொண்டர்** - "வணங்குஞ் சிறுத்தொண்டர் வைக லேத்தும் வாழ்த்துங்கேட், டணங்கும் **பழையனூர்**" (பழையனூர்த் திருவாலங்காடு - தக்கரா - 7) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரங் காண்க. பழையனூரில் இருந்த வேளாளர் எழுபதின்மர். இவர்கள் இறைவனது சத்தியம் என்ற உருவத்திற்குத் தம்மை அடியார்களாக ஆக்கி ஒருங்கே தம் உயிரையும் கொடுத்தார்களாதலின் இவர்களைச் **சிறுத்தொண்டர்** எனவும் கூறினர். "மிகச்சிறிய ராயடைந்தார், ஆதலினாற் சிறுத் தொண்ட ராய்நிகழ்ந்தா ரவனியின்மேல்" (சிறுத் - புரா - 15) என்றது காண்க.

**நவை வந்துற்ற போது** - தாம் எண்ணியபடி தமது செயல் நன்மையாக முடியாது தீமையாக முடிந்தபோது. **நவை** - இங்கு இவர்களது வாக்குக் குட்பட்டு வணிகன் நடந்தமையால் அவன் உயிரிழக்க நேர்ந்ததாகிய குற்றம்.

**வந்துற்ற** - தம்மையறியாமல் வந்து சேர்ந்தது என்பது குறிப்பு.

**தம் உயிரையும் - சொற்ற மெய்ம்மையும் தூக்கி** - தமது உயிரினையும், தாம் சொல்லிய சொல்லின் வாய்மையினையும் சீர்தூக்கிப் பார்த்து இரண்டில் எது சிறந்தது? (அல்லது) எது காக்கத்தகுந்தது ? என்று தேர்ந்து.

**அச்சொல்லையே காக்கப்பெற்ற மேன்மை** - வணிகனுடைய உயிர்க்குக் கெடுதி நேருமாயின் தங்கள் எழுபது பேருடைய உயிர்களையும் அதற்கு ஈடாகத் தருவதாகச் சொல்லிய சொல்லினையே தமது உயிரைவிடச் சிறந்த பொருளாகக் கொண்டு, அதனைச் சோர்வுபடாமற் காத்துத், தீக்குழியில் இறங்கி உயிர் கொடுத்த சிறப்பு.

**இங்குக் குறித்த சரிதச் சுருக்கமாவது** - ஒருகாலத்துப் பரத்தை வலைப்பட்ட ஒரு வணிகன் தன்னைத் திருத்த முயன்ற தன் மனைவியைத் தனிவழிப் படும்போது கொன்றுவிட, அப்பழி நீலி என்னும் பேயாகி அவனை அலைத்து வந்தது. அதினின் றும் மீளும்பொருட்டு, அவன், ஒரு பெரியார் தந்த மந்திரவாளினை ஏந்திக்கொண்டே

திரிந்து வந்தனன். அப்பழியும் அவனைக் கொல்வதற்குச் சமயம் பார்த்துப் பின் தொடர்ந்து கொண்டே வந்தது. அவன் ஒருநாள் பழயனூருக்கு வந்தான். நீலியும் ஒரு பெண் வடிவம் பூண்டு, கள்ளிக்கொம்பு ஒன்றை முரித்து, அதனைக் குழந்தை வடிவமாக்கி இடையில் ஏந்திக்கொண்டு வணிகனைப் பின்தொடர்ந்து வந்தது. வணிகன் அவ்வூரில் வேளாளர் பெருமக்கள் எழுபதுபேர் இருந்த சபையின் முன்வந்து தன்னை நீலி கொல்ல வருகின்றமையால் காக்க வேண்டுமென்று அடைக்கலம் புகுந்தான். நீலியும் அச்சபையின்முன் வந்து "இவன் என் நாயகன்; இது எங்கள் குழவி; இவன் பரத்தை வயப்பட்டு எங்களை வெறுத்துக் கைவிட்டு ஓடிவந்துவிட்டான்; எங்களை ஒன்று படுத்தி வாழவைக்க வேண்டும்" என்று ஓலமிட்டது. வணிகன் மறுத்து "இது பெண்ணல்ல; நீலியென்ற பேய்" என்று சொல்ல, நீலி அக்கள்ளிக்குழந்தையைக் கீழேவிட, அது வணிகனிடம் அப்பாவென்று சென்று சேர்ந்தது. இதன் உண்மை புலப்பட வாராமையின், "நாளைத் தீர்ப்போம். இன்றிரவு நீங்கள் ஒன்றுகூடி இங்கேயிருங்கள்" என்று சபையினர் கூறினர். வணிகன் கையில் வாளிருந்தபடியால் அதனால் அவன் தன்னை வெட்டிவிடுவானாதலின் அதனைக் கழிப்பிக்க வேண்டுமென்றது நீலிப் பேய். வணிகனோ இந்த வாள் இல்லையேல் நீலிப்பேய் தன்னைக் கிழித்துக் கொன்று விடும் என்றான். இவ்விருவர்களுக்கு மிடையில் குழந்தையின் செய்கையால் ஏமாந்த வேளாளர்கள் வாளினை நீக்கிவிட்டு அவளுடன் தங்கும்படி வணிகனை ஏவினதோடு அதனால் அவனுயிர்க்குக் கேடுவருமாயின் தங்கள் எழுபது பேர்களின் உயிரையும் அதற்கு ஈடாகத் தருவதாக வாக்குறுதியும் செய்தனர். அன்றிரவு நீலி வணிகனைக் கிழித்துக் கொன்று பழிதீர்த்துப் போய்விட்டது. இதனையறிந்த வேளாளர்கள் தாங்கள் வணிகனுக்குச் சொல்லிய சொல்லே தமது உயிரினும் சிறந்தது எனக் கொண்டு தீ வளர்த்து அதில் எழுபது பேரும் மூழ்கித் திருவாலங்காட்டு அப்பரது திருஅடியில் அடைந்தனர்.

மிகப்பழைய உண்மைச்சரித்திரமாகிய இதனை ஆளுடைய பிள்ளையார் திருவாலங் காட்டுத் தேவாரத்துள் "முனநட்பாய், வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட், டஞ்சும் பழையனூர்" என்று எடுத்துக் கூறியருளினர். இச்சிறப்பினை "எஞ்சலிலா வகைமுறையே பழய னூரா ரியம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி" (திருஞான - புரா - 1011) என்று ஆசிரியர் காட்டியதுங் காண்க. ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகளது புராணங் கூறவந்தபோது அவரது மரபுச் சிறப்பு உரைக்கும் வகையால் இச்சரிதத்தினையே "மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள், கூறியசொற் பிழையாது துணிந்து செந்தீக் குழியி லெழு பதுபேரும் முழுகிக் கங்கை, ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற் பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ?" (திருத்தொண்டர் புராண வரலாறு - 15) என்று விரித்து உமாபதி சிவாசாரியார் வாயார வாழ்த்தியது காண்க. வேளாளர் தீக்குளித்த குழி இப்போது (நீலிகுளம் என வழங்கும்) ஒரு குளமாக உள்ளது. அதன் கரையில் அந்த வேளாளர் எழுபதின்மர் திருவுருவமும் நீலியின் உருவமும் ஒருகோயிலில் உள்ளன. கோயிலும் குளமும் சிலமாயுள்ளன. பழையனூர்த் திருவாலங்காட்டப்பரின் சீர்பாதந் தாங்கும் சிறந்த தொண்டர்களாய் அவ்வேளாளமரபினர் இன்றைக்கும் விளங்குவதும், அவ்வாய்மைச் சிறப்பின் மணம் இன்றளவும் வீசும் சிறப்பும் இத்திருநாட்டுக்குரிமையாவது காணப்பெறும். 3

1081\. ஆணை யாமென நீறுகண் "டடிச்சேர" னென்னுஞ்
சேணு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு

வாணி லாவுபூண் வயவர்கண் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு. ௬

(இ - ள்) வெளிப்படை. சிவபெருமானது திருவருளின் வடிவமே திருநீருகு மென்று ஈடுபட்டுத் திருநீற்றினைக் கண்டு வணங்கும் வகையால், "அடியேன் அடிச் சேரன்" என்று, (நீறுபோன்று வெளுத்த உவர்மண் ஊறிய உடம்புடைய வண்ணனை) வணஙகும், நெடுந்தூரம் பரவிய கீர்த்தி மிக்க சேரமானுடைய திருமலைநாட்டில் வாழும் ஒளிவீசும் அணிகளை அணிந்த வெற்றிபொருந்திய வீரர்கள், மைத்துனர் முறை என்னும் உரிமையைப் பாராட்டுகின்ற நீடித்த முறைமையினையுடையது **பெரிய தொண்டை** நாடாகும்.

**(வி - ரை) ஆணை** - சிவசத்தி. திருநீறு, சத்தி என்கின்ற சிவனருளின் வடிவம். "பராவண மாவது நீறு" என்ற (திருநீற்றுப்பதிகம் - 8) தேவாரமும், "நீற்றுப் பதிகம் நிகழ்த்துங் காலை, மாற்றுப் பரையின் வரலா ருகும்" என்ற அதன் விளக்கமும் காண்க.

**ஆணை யாமென நீறுகண்டு** - நீற்றினை நீருகக் காணுது எவ்விடத்தும் சிவனரு ளாகவே கண்டார் என்பதாம்.

**நீறுகண்டு "அடிச்சேரன் என்னும்"......சீர்ச்சேரனுர்** என்ற இவ்வரலாறு கழறிற்றறிவார் நாயனுர் புராணம், 17, 18, 19 திருப்பாட்டுக்களில் கூறப்பட்டுள் ளது. அரசராக முடிசூட்டிக் கொண்டு யானைமீது செல்லும் கழறிற்றறிவார் நாயனுர், உவர்மண் ஊறி வெளுத்த உடம்புடன் ஒரு வண்ணன் பொதியுடன் தம்முன் வரக்கண்டனர். அப்பொலிவு திருநீறு பூசிய தன்மையில் விளங்கவே பட்டத்து யானையினின்றும் இறங்கி அவ்வண்ணனை வணங்கினர். அவன் பயந்து "அடியேன் அடி வண்ணன்" என்ன, அதனைக் கேட்டு, அவன் வண்ணனென்றும் மேனியில் உள்ளது உவர்மண் ஊறிய வெண்மையே என்றும் திருநீறு அன்றென்றும் தெரிந்த பின், சேரர்பெருமான் அவ்வேடம் திருநீற்று வாரவேடத்தினை நினைவித்ததென்று கொண்டு அவ்வண்ணனை நோக்கி "'அடியேன் அடிச்சேரன்;'......திருநீற்றின் வாரவேடம் நினைப்பித்தீர்; வருந்தாதேகும்" என விடைகொடுத்தனுப்பினுர் என்பது.

**சேண் உலாவு சீர்** - நெடுந்தூரமும், நெடுங்காலமும் சென்று நின்று பரவும் சிறப்பு.

**திருமலைநாடு**-மலைநாட்டின் சிறப்புக்குறிக்கத் திரு என்று அடைமொழி கொடுத்து ஓதினுர். திருமலையின் தலைவரது ஏவலினுல் இந்நாட்டினின்றும் வெள்ளை யானையி லேறிச்சென்று ஆளுடைய நம்பிகள் திருமலையை அடைந்தனர். அவரைத் தொடர்ந்து சேரமானுரும் குதிரையில் ஏறிச்சென்று திருமலையை அடைந்தனர். அவ்வாற்ருல் திருமலையின் தொடர்புடைய நாடு என்ற குறிப்புமாம். (திருமலை - கயிலை.)

**வயவர்கள் - வயம்** - வெற்றி. **வயவர்** - வெற்றியுடைய வீரர்கள். **வயவர்** - வணிகர் என்றலுமாம்.

**சேரநாட்டு வயவர்கள் மைத்துனக் கேண்மை பேண நீடியமுறை** - இங்குக் குறித்த சரிதமாவது :—ஒரு காலத்தில் சேரர் நாட்டில் கலகமுண்டாக, அந்நாட்டினர் பலபக்கமும் சிதறிச் சென்றனர். அவர்களுள் ஒரு வணிகப்பெண் தொண்டை நன் ஞட்டில் ஒரு வேளாளர் மனையில் அடைக்கலம்புக்கு அவர்களால் தமது பெண்போல அன்புடன் வளர்க்கப்பட்டு வந்தனள்.

கலகம் தீர்ந்த பல நாட்களின் பின்னர் அப்பெண்ணுக்குரியவர்கள் தேடிவந்து பெண்ணை அழைத்துச் செல்ல விரும்பியபோது வேளாளர் அப்பெண்ணைத் தாம் வளர்த்தமையால் தமது பெண்ணேயாவாள் எனக்கொண்டு அவளுக்கு வரிசைகள்

